[Sri M. Subbiah Chettiar] [23rd January 1961]

அதற்கு வேண்டிய வாகன்கள் கிடைப்பதில்லை. இரண்டு மாதங்களுக்கு முன்னால் இண்டெண்ட் போட்டாலும், வாகன்கள் கிடைப்பதில்லை. காலாகாலத்தில் மழை பெய்யாமல் இருப்பதும் உற்பத்திக்குத் தடங்கலாயிருக்கிறது. டிசம்பர் மாதத்தில் அதிக மழை பெய்ததால், பயிர்களுக்குச் சேதம் ஏற்பட்டிருக்கிறது. முன் மழையினால் சில பொருள்களுக்குச் சேதம் ஏற்பட்டது. பின் மழையினால் எள்ளு, எண்ணெய் வித்துக்கள் போன்றவைகளுக்குச் சேதம் ஏற்பட்டுவிட்டது. டிசம்பர் மழையினால் நெற்பயிருக்குச் சேதமும் பின் மழையினால் அறுவடைக்குப் பாதகமும் ஏற்பட்டிருக்கிறது. முக்கியமாக பின் மழையினால், நெல் கொள்முதல் பாதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஏக்கரில் கிடைக்கக்கூடிய பயிரில் 50 சதவிகிதம் தான் அறுவடையாகியிருக்கிறது. நெல்லின் உற்பத்தி மிகக்குறைந்திருக்கிறது. அடுத்தபடியாக, விலைவாசியின் உயர்வுக்கு முக்கிய காரணம் அரசாங்கத்தின் வரிக் கொள்கை. பல பொருள்கள் மீது அதிகமான விற்பனை வரி, எக்சைஸ் வரி விதிக்கப்படுகின்றன. உதாரணமாக, சர்க்கரை, எண்ணெய் ஆகியவற்றை எடுத்துக்கொள்ளலாம். சர்க்கரைக்கு எக்சைஸ் வரி ரூ. 40 இலிருந்து ரூ. 50 வரை போகிறது. ஒரு வீசை சர்க்கரைக்கு வரி 10 அணுவாகிறது. இது பாதி சர்க்கரையின் விலையாகப் போகிறது. எண்ணெயை எடுத்துக்கொண்டால், ஒரு டின்னுக்கு விற்பனை வரியும் எக்சைஸ் வரியும் சேர்த்து ரூ. 3 முதல் மூன்று ரூபாய் எட்டணு வரை வருகிறது. ஒரு வீசைக்கு நான்கு முதல் ஐந்தணு வரையில் வரியாகக் கொடுக்கவேண்டியிருக்கிறது. இப்படி விலைவாசி உயர்வுக்குப் பல காரணங்கள் இருக்கும்போது, எப்படி விலைவாசி இறங்குமென்று எதிர்ப்பார்க்க முடியும்?

மேலும், நம்மைப் பயமுறுத்திக்கொண்டிருக்கும் நிலச் சீர்த்திருத்தம் காரணமாக, நிலவுடைமைக்காரர்களுக்கும் விவசாயிகளுக்கும் ஊக்கமின்மை ஏற்பட்டு உற்பத்திக்குறைவு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. இதை நாம் நடைமுறையில் பார்த்துக்கொண்டிருக்கிறோம். சமீபத்தில் ரஷ்யாவிலும் சீனுவிலும் எப்படி விவசாயிகள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைப் பேப்பரில் பார்த்ததினால், நிலச்சொந்தக்காரர்களுக்கு ஊக்கமும் நம்பிக்கையும் ஏற்பட்டால், நலமாக இருக்குமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

4-20 p.m.

அடுத்தபடியாக, நாட்டிற்கு நல்ல சாலைகள் அவசியம். நல்ல சாலைகளுக்கு பெயர் வாங்கிய நம்முடைய மாநிலத்தில் சாலைகள் சீர்கெட்டிருக்கின்றன. சென்னை நகரத்தில் சாலைகள் சீர்கெட்டிருக்கின்றன. எல்லா இடங்களிலும் நல்ல முறையில் சாலைகளை அமைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டும். கோடிக்கணக்கான ரூபாயைச் செலவழித்தும் சாலைகள் சீர்படவில்லையானல், சாலைகளை அமைக்கச் செலவாகும் ரூபாய் என்னவாகிறது என்ற சந்தேகம் ஏற்படுகிறது. ரோடு புறம்போக்குகளில் ஆக்கிரமிப்புகளை அப்புறப்படுத்த வேண்டும். அதனால் போக்குவரத்துக்கு இடைஞ்சல் ஏற்படுவதுமல்லாமல், விபத்துக்களும் ஏற்படக் காரணமாக இருக்கின்றன.

23rd January 1961] [Sri M. Subbiah Chettiar]

வெளி ஜில்லாவிலிருந்து வந்தவன் என்ற முறையில் சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். வேறு வேறு காலங்களில் மந்திரிகளும் உத்தியோகஸ்தர்களும் சுற்றுப்பிரயாணம் செய்கிறார்கள். அவர்களை வரவேற்க ஜில்லா அதிகாரிகளும் மற்ற நிர்வாகஸ்தர்களும் செல்லவேண்டியிருக்கிறது. அதனால் அவர்களுடைய அன்றாட முக்கிய அலுவல்கள் தடைப்படுவதுடன் பொது மக்களுக்கு இடைஞ்சலும் ஏற்படுகிறது. இதைத் தவிர்க்க அரசாங்கம் ஆவன செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, நீர்ப்பாசனத் திட்டங்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் சிறிய, பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் சர்வே நடந்தும் நடந்துகொண்டும் வருகின்றன. எல்லாத் திட்டங்களையும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துப் பூர்த்தி செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். சீர்கெட்டிருக்கும் பாசன வாய்க்கால்களையும், குளங்களையும் சீர் செய்ய வேண்டும்.

புதிய இரயில்வே லைன்களைப்பற்றி ஒருசில வார்த்தைகள் நான் சொல்ல விரும்புகிறேன். விலைவாசி ஏற்றத்துக்கு முக்கிய காரணமாக இருப்பது வடநாட்டிலிருந்து தென்னாட்டிற்குப் பொருள்களைக் கொண்டுவருவதற்கு வாகன் வசதி இல்லாமலிருப்பது. நிலக்கரி கொண்டுவருவது தடைபட்டு, தொழிற்சாலைகள் வேலையில்லாமல் இருக்கின்றன. சாமான்களின் விலை ஏறியிருக்கிறது. வால்டேர் முதல் சென்னை வரையில் இரண்டு லைன்கள் போட்டுக் கொடுத்தால், உணவுப் பொருள் தாராளமாக வர வழி ஏற்படும். பருப்பு, எண்ணெய் வித்துக்கள் வடநாட்டிலிருந்து வரவழைக்க வேண்டியிருக்கிறது. வாகன் வசதியில்லாததால், அவை வருவது தடைபடுகிறது. அதனால், விலைவாசி உயர்கிறது. அதைத் தடுக்க வால்டேரிலிருந்து சென்னை வரையில் இரண்டு லைன்கள் போட்டுத் தர ஆவன செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

சேலம்-பங்களூர், விருதுநகர்-தூத்துக்குடி, திருநெல்வேலி-கன்யாகுமரி லைன் போட்டு வசதி செய்து கொடுத்தால், நலமாக இருக்கும். சமீபத்தில் சென்னை-திருச்சி லைனில் இட நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. சரக்கு போவதற்குச் சிரமமிருக்கிறது. விசாரித்தால், போக்குவரத்துக்குச் சரியான லைன் இல்லையென்று இரயில்வே அதிகாரிகள் சொல்கிறார்கள். ஆதலால், வால்டேர் முதல் சென்னைக்கும், திருச்சி முதல் சென்னைக்கும் இரண்டு லைன்கள் போடவேண்டும்.

நெய்வேலியில் இரும்பு உருக்கு சாலை ஏற்படுத்தி, சேலம் இரும்புக்கனியை உபயோகப்படுத்த முயற்சி செய்யலாமென்று சொல்கிறார்கள். அந்த முயற்சியையும் அரசாங்கம் செய்தால், நலமாக இருக்கும்.

(Sri A. Subramaniam in the Chair.)

உர சப்ளையில் மத்திய அரசாங்கத்திலிருந்து இங்கு வரும் ஒரு கோட்டாவை ஜில்லாவாரியாகப் பிரித்துக் கொடுக்கிறார்கள். ஜில்லா வாரியாக, தாலூக்கா வாரியாக,

[Sri M. Subbiah Chettiar] [23rd January 1961

ரெவின்யு பிர்க்கா வாரியாக, கிராமங்கள் வாரியாகப் பிரித்துக் கொடுக்கிறார்கள். இன்றைய நிலையில் ஒரு வியாபாரியோ வேறு யாருமே அதை விற்பனை செய்ய முடியாது. கூட்டுறவு சொசைடி மூலமாகத்தான் அதைச் செய்யவேண்டும். இருந்தாலும் என்று மில்லாமல் இன்றுதான் உரத்திற்குக் கிராக்கி ஏற்பட்டு ஜனங் களுக்கு கிடைக்காத வகையில் இருக்கிறது. அந்தக் கஷ்டத்தைப் போக்க வேண்டுமென்றால் இன்னும் அதிகமான கோட்டாவை மத்திய அரசாங்கத்திலிருந்து வாங்கவேண்டுமென்று தெரி வித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்த உரம் பிளாக் மார்க்கெட்டில் கிடைப்பதற்குக் காரணம் என்னவென்றால், இன்றைக்குக் கொடுக்கக்கூடிய பர்மிட்தான். அதை எப்படிக் கொடுக்கிறார்கள் ? கிராம அதிகாரியிடம் சீட்டு வாங்கிக் கொண்டு தாலுகாவிற்குப் போகவேண்டும். தாசில்தாரிடம் பர்மிட் வாங்கவேண்டும். அதைக் கொண்டு கூட்டுறவு சொசைடிகளுக்குச் செல்லவேண்டும். அதற்குள் பத்து நாட்கள் ஆகிவிடும். அப்படி சிரமங்கள் பல ஏற்பட்டு கடைசியில் பர்மிட் வாங்கிக் கொண்டு கூட்டுறவு சொசை டிக்குப் போனால் காலையில் போனால் மாலையிலும் மாலையில் போனால் காலையிலும் வரச் சொல்லுகிறார்கள். ஒரு விவசாயி சிரமப்பட்டு ஒரு கோட்டாவை வாங்கி வந்தால் முக்கால் மூட்டை, அரை மூட்டை எடுத்துக்கொண்டு வரவேண்டியிருக் கிறது. அது கடைசியில் காலம் தவறிவிடுவதால் தேவையில் லாமல் போய்விடுகிறது. பின்னால் அதை என்ன செய்வது அவனே கூடிய விலைக்கு விற்கக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. பிறகு அவனுக்குத் தேவயான சமயத்தில் கூடிய விலை போட்டு வாங்கவேண்டியிருப்பதால் அதற்கு ஈடு செய்ய இதைக் கூடுதலாக விற்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. லைசென்ஸ், கண்ட்ரோல், பர்மிட் இவை இருக்கும் வரை மக்களுக்கு எந்த சாமானும் சரியாகக் கிடைக்காது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, சமீபத்தில் ஜில்லாவாரியாக, மாகாண ரீதி யாக பல கமிட்டிகளை அரசாங்கம் நியமிக்கிறார்கள். இந்தக் கமிட்டிகளில் நியமிக்கும் ஆட்கள் யார்யார் என்று நாம் கவனித்துக்கொண்டு வந்தால் அரசாங்கக் கட்சியில் இருந் தால்தான் இந்தக் கமிட்டிகளில் இடம் பெறலாம் என்ற நிலைமை தெரியவரும்.

THE HON. SRI P. KAKKAN : காங்கிரசில் சேராதவர்களும் இருக்கிறார்கள்.

SRI M. SUBBIAH CHETTIAR : சேர்ந்தவர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் ? திருச்சி ஜில்லாவைப் பொறுத்தமட்டில் அவர்களுடைய விவரங்களை எடுத்துச் சொல்ல நான் காத் திருக்கிறேன். முக்கியமாக என்டோமெண்ட்—டெம்பிள் கமிட்டி களில் நியமிக்கக்கூடிய மெம்பர்களையும், இதர கமிட்டிகளில் நியமிக்கப்படுபவர்களையும் நல்ல யோக்யதாம்சம் உள்ளவர் களாக இருந்தால் யாராக இருந்தாலும் அவர்களை நியமிக்கும்

23rd January 1961] [Sri M. Subbiah Chettiar]

படி அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன், இந்த நிலைமையில் நடந்துகொண்டிருப்பதால் அரசாங்கம் மக்களுக்குச் செய்ய வேண்டிய சகல காரியங்களுக்கும் இனி அவ்வாறு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு தலைவர் அவர்களுக்கு என் வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* VIDWAN T. MUTHUKANNAPPAN : உதவித் தலைவர் அவர்களே, நம்முடைய கவர்னர் பெருமகனாரின் உரையை ஆமோதித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த உரை ரத்தினச் சுருக்கமாக இருக்கிறது. முதலிலே ராணி அம்மையாருடைய வருகைக்கு மகிழ்ச்சி தெரிவித்துக் குறிப்பிட்டிருக்கிறார் நமது கவர்னர் பெருமகனார். உண்மையிலேயே மகிழ்ச்சியடையக்கூடிய செய்திதான் அது. அந்த அம்மையார் நம்முடைய பாரத புண்ணிய பூமியைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் போகிறபொழுது ஒரு படிப்பினையோடு போவார்கள் என்பது என்னுடைய கருத்து. ஒரு நாட்டை, நாட்டு மக்களை அடிமைத் தளையிலே வைத்திருந்தபிறகு விடுதலையளித்தால் அடிமைத்தளையில் இருந்த நாட்டிற்கும், நாட்டு மக்களுக்கும் விடுதலையடைந்த பிறகு அந்த நாடும் மக்களும் இருக்கும் சுபிட்ச நிலைக்குமுள்ள வேறுபாட்டை அறிந்துகொள்ள இது ஒரு அரிய சந்தர்ப்பம். உலகத்திற்கே அவற்றை எடுத்துச்சொல்லக்கூடிய ஒரு நிலையை அம்மையார் பெறுவார்கள் என்று நான் நினைக்கிறேன்.

அடுத்தபடியாக கவர்னர் பெருமகனார் மழையைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். இங்கு பெய்த பெருமழையினாலும் ஏற்பட்ட பெரு வெள்ளத்தினாலும் மேடுபள்ளங்கள் எல்லாம் வெள்ளக்காடாக இருந்தது என்று சொல்லலாம். இந்த மழையைப் பற்றி நினைக்கிறபோழுது வள்ளுவர் அருளிய குறள் ஒன்று என் நினைவிற்கு வருகிறது. மக்களைக் கெடுத்துவிடுவதும், கெட்டழிந்து சீர்குலைந்து இருப்பவர்களைப் பாதுகாப்பதும் மழைதான் என்பதை

> "கெடுப்பதூ உங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
> எடுப்பதூ உம் எல்லாம் மழை"

என்று சொல்கிறார், இதற்கு எடுத்துக்காட்டாக விளங்கியது சமீப மழை. இந்த மழை நன்மை செய்தது என்று சொல்வதைவிட ஓரளவு மக்களுக்குப் பெரும் தீமைகூட செய்திருக்கிறது என்று சொல்லலாம். குறிப்பாக மீனவ மக்களுக்குப் பெரும் கேட்டினை விளைவித்திருக்கிறது இந்த மழை. அதுவும் மீனவர்களின் துரதிருஷ்டமோ என்னவோ தெரியவில்லை மழையினாலும் அடித்த பேய்க்காற்றினாலும் நூற்றுக்கணக்கான குடிசைகள் பாழடைந்தன. ஆயிரக்கணக்கான மக்கள் தங்க இடமில்லாமல் தவித்தார்கள். உள்நாட்டிலே, கிராமங்களிலே உள்ள மக்களாவது பக்கத்திலே நன்றாகச் சீர்திருத்திக் கட்டப்பட்ட கல் வீடுகளிலே போய்த் தங்கியிருப்பார்கள். ஆனால் கடற்கரையிலே கல் வீடுகளைப் பார்ப்பது கஷ்டம். எல்லாம் குடிசைகள்தான். அதனால் அவர்கள் போய்த் தங்கக்கூட குடிசையில்லாமல் தவித்

[Vidwan T. Muthukannappan] [23rd January 1961

தார்கள். நான் சென்னை, செங்கற்பட்டு ஜில்லாக்களிலுள்ள சுமார் பத்து பதினைந்து கிராமங்களைச் சுற்றிப் பார்த்தேன். உண்மையிலேயே வேதனையடைந்தது என் உள்ளம். ஆனால் நொந்து நைந்துபோன மீனவர்களுக்கு அரசாங்கத்தார் உதவி செய்வார்கள் என்று நிச்சயமாக நம்பினார்கள்; நம்பினேன். இந்த மழை மீனவர்களை மட்டும் பாதிக்கவில்லை. மற்றவர்களையும் பாதித்திருக்கிறது என்று சொன்னேன். முன்பு மீனவர்களின் துரதிருஷ்டமோ என்னவோ என்று சொன்னேனே அதைத்தான் இப்போது குறிப்பிடுகிறேன். மற்ற உள்நாட்டுக் கிராமங்களில் பாதிக்கப்பட்ட மக்களுக்கெல்லாம் அரசாங்கத்திலிருந்து ரூ. 20, 30, 35, என்று நிவாரண உதவியைக் கொடுத்திருக்கிறார்கள். அது எனக்குத் தெரியும். ஆனால் இன்று வரை அரசாங்கம் பாதிக்கப்பட்ட மீனவர்களுக்கு ஒரு உதவிகூட செய்யவில்லை என்று எண்ணும்போது வருத்தம் ஏற்படுகிறது. மீன் இலாகாவிலிருந்துகூட சில அலுவலர்கள் பாதிக்கப்பட்ட இடங்களைப் பார்க்க என்னுடன் வந்திருந்தார்கள். சேதமடைந்துபோன குடிசைகளைப் பார்த்தார்கள். கணக்கும் எடுத்தார்கள். ஆனால் உதவிதான் செய்யவில்லை. அவர்கள் நினைத்திருக்கலாம். அரசாங்கம் மீனவர்களுக்கு உதவுமென்று. அதாவது கலெக்டர் கொடுப்பார் என்று நினைத்தார்கள் போலும். கலெக்டர், மீன் இலாகா கொடுப்பார்கள் என்று நினைக்கிறார் போலும். இரண்டும் கெட்ட நிலையிலே ஒன்றும் இல்லாமல் இன்றளவும் மீனவ மக்கள் வீடிழந்து பரிதவிக்கும் நிலையில் இருக்கிறார்கள். இதைச் சீர்தூக்கிப் பார்த்து அந்த ஏழை மீனவர்களுக்கு உடனடியாக விழ்ந்துபோன குடிசைகளைக் கட்டிக்கொடுக்க வேண்டுமென்று அரசாங்கத்தை மிகவும் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் பல படகுகள் உடைந்து விட்டன. அதைப் புதுப்பித்து அவர்களுக்குப் பண உதவி செய்யவேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

4-30 p.m.

அடுத்தபடியாக மின்சாரத்தைப்பற்றியும் குறிப்பிட்டிருக்கிறார், நம்முடைய கவர்னர் பெருமகனார். மின்சாரம் என்று நினைக்கிற பொழுது நமக்கு எப்போதும் மகிழ்ச்சி ஏற்படுகிறது. நம்முடைய நாட்டிலே இருண்டு கிடந்த இடங்களிலெல்லாம் ஜகஜ்ஜோதியாக ஒளி வீச ஆரம்பித்திருக்கின்றன மின் விளக்குகள் இப்போது. பத்தாயிரத்திற்கு மேற்பட்ட கிராமங்கள் இப்போது மின்சார வசதி பெற்று பம்ப் செட்டுகளும் விளக்குகளும் பெற்று சிறந்த நிலையில் விளங்குகின்றன. ஹரிஜன சகோதரர்கள், மீனவர்கள் வாழ்கிற இடத்திலும் மின் விளக்குகள் போட்டிருக்கிறார்கள். ஆனால் அந்த விளக்குகள் அதிகமாக எரிந்தால் இரண்டு மாதம் மூன்று மாதம் தான் எரிகின்றன. அந்த மின்சாரத்திற்காக ரூ. 30 முதல் 50 வரை மாதாமாதம் கட்டவேண்டியிருக்கிறது. கட்ட வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள்; கட்டவில்லையானால் விளக்குகள் அணைக்கப்படுகின்றன என்று நண்பர் ஒருவர் கூறினார். ஏழைகள் எங்கிருந்து அந்தப் பணத்தைக் கொடுப்பார்கள்?

23rd January 1961] [Vidwan T. Muthukannappan]

மூன்று நான்கு குப்பங்களிலே விளக்குக்குச் சேர வேண்டிய பணம் கேட்டு அவர்கள் அந்தப் பணத்தைக் கட்ட முடியாததால் விளக்கை அணைத்து விட்டார்கள். ஆகையால் ஹரிஜன சகோதரர்கள் வாழ்கிற இடத்திலும் ஏழை மீனவர்கள் வாழ்கின்ற இடத்திலும் மின்விளக்குக்கு ஆகும் செலவைத் தயவுசெய்து அரசாங்கமே ஏற்றுக்கொண்டால், தொடர்ச்சியாகப் பணம் கட்டமுடியாமல் வாடி வதங்குகிற ஏழை மக்களுக்குப் பெரிய உதவியாக இருக்கும் என்று பணிவுடன் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பிறகு கல்வியைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். ஆறு வயது முதல் பதினொன்று வயது வரை சிறுவர்களுக்குக் கட்டாயக் கல்வி அமுலுக்குக் கொண்டுவரப்படுகிறது. பதினொன்று வயது வரை படித்தால் ஐந்தாம் வகுப்புதான் படிக்க முடியும். இந்தக் காலத்தில் ஐந்தாவது வகுப்பு வரையில் படித்தால் ஏதாவது வேலை கிடைக்குமா? ஆறு வயது முதல் பதினொன்று வயது வரை ஐந்தாம் வகுப்பு வரையில்தான் படிக்கமுடியும். பணியாள் **(peon)** வேலை வேண்டுமானாலும்கூட அதற்கு எட்டாவது வகுப்பு படித்தாலன்றி கிடைக்காது. அந்த நிலையில் இருக்கும்போது அரசாங்கம் 11 வயது வரை இலவசக் கட்டாயப்படிப்பு கற்கலாம் என்ற திட்டத்தை 6 முதல் 14 வயது வரை என்று மாற்றினால் ஏழை மாணவர்கள் குறைந்தது எட்டாம் வகுப்பு வரையாவது படிப்பார்கள். சமீபத்தில் 11-ம் வகுப்பு வரை இலவசமாகப் படிப்புக்கு ஏற்பாடு செய்யப் போவதாக நமது முதன் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது மிகவும் வரவேற்கத் தக்கது. அந்த நிலை வந்துவிட்டால் இந்த நாடு பன்மடங்கு கல்வியிலும் நாகரீகத்திலும் உயர்ந்துவிடும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுப்பதைப்பற்றி ஒன்றே ஒன்று சொல்ல விரும்புகிறேன். "பாக்வர்டு கம்யுனிடி" என்று வைத்திருக்கிறோம். "மோஸ்ட் பாக்வர்டு கம்யுனிடி" என்று வைத்திருக்கிறோம். அதாவது, பிற்பட்ட வகுப்பு மிகவும் பிற்பட்ட வகுப்பு என்று. இது நடைமுறையில் ஒன்றும் பயனில்லாததாய் இருந்தது. பேருக்கு மிகவும் பிற்பட்ட சமூகமென்று சொல்கிறோமே தவிர, அதையும் பிற்பட்ட வகுப்பு என்று தான் எடுத்துக்கொள்கிறார்கள். கல்விச்சலுகை பொறுத்த வரையில் எஸ்.எஸ்.எல்.சி.-க்குப் பிறகு படிக்க வேண்டுமானால், மிகவும் பிற்பட்ட வகுப்புக்குச் சாதாரணமாக மத்திய உபகாரச் சம்பளம் கிடைக்கவே கிடைக்காது. காரணம் இரண்டு மூன்று வருஷங்களாக விசாரிக்கின்றேன்—70 பர்சன்ட் 75 பர்சன்ட் மார்க்கு வாங்கினாலொழிய மத்திய அரசாங்க 'ஸ்காலர்சிப்' கிடைப்பதில்லை. காடனும் மாடனுமாக இருந்த நமது பிள்ளைகள் இப்பொழுது தான் முன்னேற்றப் பாதையில் அடியெடுத்து வைக்கிறார்கள். இந்த மாணவர்கள் எப்படி 70 பர்செண்ட் 75 பர்செண்ட் மார்க்குகள் வாங்க முடியும்? இதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். எனக்குத் தெரியும்: சென்ற ஆண்டிலே மீனவ வகுப்பைச் சேர்ந்த

[Vidwan T. Muthukannappan] [23rd January 1961

எட்டு மாணவர்கள் மத்திய அரசாங்க உதவிக்கு விண்ணப்பம் அனுப்பியிருந்தார்கள். ஒரு மாணவன் 65 மார்க்கு வாங்கியிருந்தான் பயனில்லை. ஒருவருக்கும் ஸ்காலர்சிப் கிடைக்கவில்லை. இந்த ஆண்டு எனக்குத் தெரிந்து 13 பேர் விண்ணப்பங்கள் அனுப்பியதற்கு ஒருவனுக்குக் கிடைத்தது. அதிருஷ்டவசமாக அவன் மார்க்கை எட்டிப்பிடித்திருந்தான். முற்பட்ட (forward community) வகுப்பில் இருக்கவேண்டியவர்கள் எல்லாம் செல்வாக்காலும், சலுகையாலும் பிற்பட்டோர் வகுப்புப் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். அப்படியிருக்க உண்மையான பிற்பட்டோருக்கு எப்படி நன்மை கிட்டும்? முற்பட்ட வகுப்புக்குரிய அத்தனை பேரும் சலுகையை அடித்துக்கொண்டு போகிறார்கள். பிற்பட்டவர் பட்டியலைச் சரிபடுத்தவேண்டும். விண்ணப்பம் செய்பவர்கள் பிற்பட்ட வகுப்பினர்தானா என்று சீர்த்தூக்கிப் பார்த்துத் தக்கவர்க்கு உதவி கொடுத்தாலொழிய, பிற்பட்ட வகுப்பினருக்குப் எந்தப்பயனும் ஏற்படாது. இது மிகவும் முக்கியமான செய்தி. இப்பொழுதெல்லாம் உண்மையிலேயே பிற்பட்ட வகுப்பினர்கள் அதிகம் பயன் அடைவதில்லை. அரசாங்கம் இதை அவசியமாகச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன், வணக்கம்.

* SRI M. SESHACHARIAR: Mr. Vice-Chairman, Sir, while supporting the main motion of thanks on the Governor's Address I would like to say a few words. The first thing, spoken of by many hon. Members, is about agriculture. Regarding agriculture we have been saying that we have increased the production by leaps and bounds. It is stated that the production which at one time was 39 lakhs tons went up to 44 lakhs tons during the second plan. At the end of that plan it is stated that it had gone up to 53 lakhs tons under the Third plan it is proposed to take it to 70 lakhs tons, as this appears to be the traget of production under the Third Plan not to mention of the reserve that is sought to be built up. Except Parambikulam Project we have almost implemented all major irrigation projects. The only sources on which we can depend are the minor irrigation sources such as the ponds, lakes and tanks, Sir, about 22 lakhs of acres are being irrigated by about 30,000 tanks and all these 30,000 tanks have got to be repaired every year. If they are not repaired every year, there is silting in the tank and that depletes the irrigation resources to some extent and that in turn reduces the extent under irrigation. Therefore I say the tanks have to be desilted every year. The work that was taken up by the Government in this regard was only of the order of about 1,600 tanks. It is said that about 8,000 tanks will be taken up for repairs during the Third Plan period. It is also given out that 500 of these will be taken up by the Public Works Department and the rest would be done by the Panchayat councils. That is, major irrigation works will be attended to by the Public Works department and the rest by the Unions. If with the staff available they could do repairs to only 1,600 tanks during the four

23rd January 1961] [Sri M. Seshachariar]

years of the Second Plan period, we have to consider whether the same staff would be able to attend to 8,000 tanks during the Third Plan Period. Even if they could carry out repairs to all these tanks, the tanks repaired in the first year will get silted up in the next year and therefore such tanks have to be desilted again. Therefore I would submit that a large number of expert personnel have to be appointed for attending to these tanks. Desilting, they still think, is only an experiment. But I have seen in some places where it has been done in our district that it is very useful. By desilting they have been able to impound sufficient water to supply for three months more. That I think could be adopted with great advantage in respect of all the tanks in the State. 4-40 p.m.

Sir, electricity is said to be extending to the rural areas and we have again started giving loans for the purpose of construction of wells. Previously the amount sanctioned for the construction of a well was Rs. 1,000. Now it has been raised to Rs. 2,000. If the soil is hard to that extent the loan is increased. Rs. 250 or Rs. 500 as the case may be is treated as subsidy and the rest is treated as loan. For the past two years 1958-59 and 1959-60 loans for about 2,500 or 2,700 wells alone have been sanctioned It has also been stated that loans to the extent of Rs. 40,000 will be granted for the putting up of tube-welsl, and of this Rs. 500 will be given in cash as subsidy. In all these things we have to consider whether the officials to whom the ryots apply for sanction of loans, sanction these loans, without delay, because the time factor is important if they have to use electricity for irrigation purposes. Wells have got to be dug and borewells have to be put up before electricity is extended to the villages. To put up borewells power drills are necessary. They are not easily available. Then the loans are not sanctioned in time. The delay in sanctioning the loans could really be avoided if the Government would instruct the authorities concerned to avoid the usual delay that we find in sanctioning these loans. If this is done, I think, it would be very helpful and useful to the agriculturists. This is so far as agriculture is concerned.

Another thing to which I would like to make a reference is this. The Hon. Minister for Finance who had returned from a tour of the United Kingdom and the continent has been saying that we should have agricultural schools for farmers. I do not know whether our Government have got such a proposal. I remember he has also written an article on this somewhere that such schools should be started for the specific purpose of training the agriculturists. In such schools farmers might learn the actual use of appliances and implements that are sought to be introduced by the Agricultural Department and later on use them in their own villages as also teach those methods to others in their villages. Very likely the Government may take up such a scheme. If it is taken up it will be of great use to the agriculturists.

As regards development of industries, many hon. Members have spoken about it and it was all praise to our Hon. Minister for Industries. Reference was made to the Neyveli Project. It is

[Sri M. Seshachariar] [23rd January 1961]

an integrated project and there are several components as was pointed out by the Governor in his Address. We are waiting to get several things from this project. The thermal station now being put up with the Russian aid will be completed soon. We hoped to have fertilizers from that project from the middle of this year even. But I think it may not be possible as matters stand now. I think there was an official committee which went into the matter of developing new industries in our State. I think some more new industries could be started along with those already contemplated.

Now, Sir, we are opening a number of sugar factories and yet more are sought to be started. We have a co-operative sugar factory in our district. There is one in North Arcot.

(Mr. Chairman in the Chair.)

The molasses, that is, the fluid residue left out after extraction of sugar is now sought to be exported elsewhere. This molasses is the basic raw material for the extraction of power and industrial alcohol. We saw this being done at Nellikuppam factory. This is the only plant we have for the said purpose. We can start more such plants in other places. It is expected that we would be having 50,000 tons of molasses or so during the course of next year or two years. A major portion of it is now exported to other places for extraction of power alcohol. I think we can have more plants for this purpose in our State itself.

Another thing I want to say in this connection is this. We are thinking of starting factories for the manufacture of paper, and they want soft wood for the manufacture of paper. But it is said by experts—I have alos seen it stated in the report of the official committee—that 'Bagasse' that is the residue left after the cane is crushed can be used as raw material for the manufacture of paper, in the place of soft wood. Such a thing can be tried in our State as large quantities of bagasse will be available very soon. These paper mills could be started very near the sugar factories. The sugar mills themselves could set up paper factories also or anybody in the rivatep sector could take this up and set up paper mills in South Arcot or Chingleput or North Arcot because we have got four to five sugar mills within a radius of 100 to 150 miles. I think that is absolutely necessary in so far as there is dearth of supply of paper.

In regard to industries there is one other thing. I understand that there is a proposal and some persons in the private sector I gather have applied for starting a jute mill. Now we are getting about 75,000 bales of gunnies from West Bengal. We have therefore to pay high transport charges on these whether they are brought here by ship or railway. On the other hand if we start a jute mill in our State itself we can save a lot of these transport charges.
4-50 p.m. They say that jute could not be cultivated here. But there is a substitute that is available. They say that it is Masta fibre. I

23rd January 1961] [Sri M. Seshachariar]

think this is grown to some extent in our State. Once such a plant is raised in our State, it would be a very good thing. There are other industries also. I think the jute industry could be started in our State, because we are paying very heavily for the gunnies. Gunnies which are valued at 4½ annas each elsewhere at the place of manufacture are sold at 12 to 14 annas each here.

Regarding the spread of industries, the Hon. Minister has already done a great deal. I think that we have started two schools for junior mechanic's course. I think there is accommodation provided for one hundred boys in each school. They were started only last year. As far as unemployment among the educated is concerned, those who have passed the third form are admitted in these schools, and some of them are even given stipends. I think several such schools have got to be started. We see advertisements everyday in all papers calling for mechanics in this industry or that. I think it would be better to start a number of schools if really our unemployed young men are to be benefited.

One other thing I would like to mention before I close. This is about the Panchayat Union Councils. I have got some experience of these, because the Panchayat Union Council is being worked in our district. The Panchayat Union Council is said to be a democratic institution. It is said that power is being handed over to the elected bodies—the villagers. It is not really so. Power is really in the hands of the Commissioner. The whole thing is in the hands of the Commissioner from top to bottom. The entire correspondence goes through the Commissioner. The Chairman does not know anything about what is happening anywhere in his area. In regard to the Works Committee, not a pie can be sanctioned by the Chairman unless the technical sanction is given by the Divisional Engineer, who is far away from the place of the Council. It takes months before any work can be started. Formerly in the case of Block Development, the Block Development Officer could give technical sanction to the extent of Rs. 200 or Rs. 300. Even this power is not there now.

The teachers are sought to be transferred without the knowledge of the Chairman. In one case I found that a teacher was transferred from the place where the Chairman himself was living. The Chairman did not know that the teacher had been transferred from his place. The Chairman would not like the teachers to be transferred. Everyday there is some conflict or other between the Commissioner and the Chairman, because the Commissioner does not fail to show to the Chairman that he has no powers. In regard to several matters, there is conflict. Certain things have still not been clarified. The Committees are there. Expenditure is being incurred on works, and sanction comes only later. Nothing is sanctioned before the work is started. This is the result of much longed for panchayat Government. I wish the Government take speedy steps to demarcate the power of the Chairman and the Commissioner and to see that the Chairman is consulted in all

matters by the Commissioner. One other point is that the development aspect of it has not been transferred to the Panchayat Union still. Probably it will take a little more time.

Sir, I do not wish to take up any more time of the House. I would only say that the Government should go into the several matters I have brought before the House and see that things are clarified at a very early date.

(Deputy Chairman in the Chair.)

* Sri K. V. RAMASWAMY: கனம் உதவித் தலைவர் அவர்களே, கவர்னர் அவர்களின் உரையை ஆதரித்துச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். முன்னாலே பேசிய நண்பர்கள் நம்முடைய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ராணி அவர்கள் நம்முடைய பாரத கண்டத்திற்கு விஜயம் செய்யும்போது, அவர்களை மனமார வரவேற்பதாகக் கண்டிருப்பதைப்பற்றிப் பேசினார்கள். நானும் ராணியார் அவர்களை வரவேற்கிறேன். ஏனென்று கேட்டால், நமது பாரத கண்டத்தின் மேலான வழக்கம் எதிரிகளையும் கூட வாழ்த்துக் கூறி வரவேற்பது. மேலும், மஹாத்மா காந்தி அவர்கள் நமக்கு அஹிம்ஸா தத்துவத்தைப் போதித்திருக்கிறார்கள். யாரையும் பழி வாங்கக் கூடாது என்று போதித்திருக்கிறார்கள். அந்த மேலான தத்துவத்தையும் அனுசரித்து ராணியார் அவர்களை வரவேற்பதாகச் சொல்லியிருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறேன். சுதந்திரத்திற்குப் பிறகு நாம் செய்துள்ள மேன்மையான வேலைகளைப்பற்றி அவர்கள் தம் நாட்டிலே எடுத்துரைத்தால், மிகவும் வரவேற்கக்கூடியதாக இருக்குமென்று நான் நம்புகிறேன். அப்படியின்றி இவ்வளவு பெரிய காரியங்களைச் செய்ய மற்றவர்களுக்கு விட்டுவிட்டோமே என்று ஏக்க உணர்ச்சி ஏற்படாமலிருக்க எல்லாம் வல்ல இறைவன் உதவி செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

கவர்னர் அவர்கள் தம்முடைய உரையிலே தொழிற்சாலைகளைப் பற்றி மிக விரிவாகக் கூறியிருக்கிறார். விவசாயத்திற்கு அதிகச் சலுகை காட்டப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், கிராமங்களில் விவசாயம் சீரான நிலையிலில்லை. விவசாய மக்கள் நல்ல நிலையிலில்லை என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். இன்று நாம் இதரத் தொழில்களுக்கு அதிகச் சலுகைகள் காட்டிக்கொண்டு வருகிறோம். விவசாயச் செலவு அதிகமாக இருந்துகொண்டு வருகிறது. இந்த நிலைமை நீடித்துக் கொண்டு போவதால், விவசாயி கஷ்டத்துக்கு ஆளாகிறான். ஆகையால், விவசாயத் தொழிலை விட்டுவிடவேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும்.

மதிப்பிற்குரிய கனம் அங்கத்தினர் திரு. பாலசுப்பிரமணிய ஐயர் ஆங்கிலத்தில் பேசியபோது, எனக்குக் கொஞ்சம் அரைகுறையாக அர்த்தமாயிற்று. விவசாயத் தொழிலைப்பற்றிச சிந்தனை செய்யவேண்டுமென்ற கருத்தோடு அவர் பேசியுள்ளார். 'அவரும் விவசாயிகளோடு தொடர்பு உள்ளவராகக் கருதப்படுகிறார் என்று

23rd January 1961] [Sri K. V. Ramaswamy]

தெரிந்து கொண்டேன். ஒவ்வொரு விவசாயியும் இதரத் தொழில்களுக்குப் போகவேண்டுமென்ற கருத்துக் கொண்டிருக்கிறானே தவிர, விவசாயத்தில் ஊக்கம் செலுத்தி, விவசாயத்தை முன்னேற்றம் அடையச் செய்யவேண்டும் என்ற நல்ல நோக்கம் இல்லாமலிருக்கிறான். விவசாயத்தை முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமானால், விவசாயத்துக்கு அஸ்திவாரமாக இருப்பவர்களுக்கு, அதற்கு ஆக்கம் கொடுக்கக்கூடியவர்களுக்கு உள்ள குறைகளை அவ்வப்போது நிவர்த்தி செய்து, அவர்களுக்கு வேண்டிய உதவி செய்யவேண்டும். கள்ளன் போன மூன்றாவது நாள் கதவு முக்கரணம் போட்ட மாதிரியோ, கல்யாணத்திற்குப் பணம் கேட்டால் கர்மாந்தரத்திற்குப் பணம் கிடைப்பது போலவோ செய்வதில் பிரயோசனமில்லை. காலாகாலத்தில் வேண்டிய உதவியைச் செய்து விவசாயத்தை முன்னேற்றம் அடையச் செய்யவேண்டியது அரசாங்கத்தின் கடமையும் நம் போன்றோரின் கடமையுமாகும். அதுமட்டுமல்ல இன்றைக்குக் கடவுளுக்கு ஏதோ ஒரு பொறுமை போலும். இன்று சென்னை மாநகரத்திலே ஏற்பட்ட மழையின் நிலைமையைப் பார்க்கும் போது கடவுளுக்குக் கொஞ்சம் நம் பேரிலும், சிட்டியில் இருக்கக் கூடியவர்கள் பேரிலும் கோபம் வந்துதான் மழை பெய்ததோ என்று நான் எண்ணுகிறேன். இப்போது ரோட்டிலே போனால் கவர்ன்மென்ட் பஸ்ஸில் போகலாம். டாக்சியில் போகலாம். ரோடுகள் பழுதாக இருந்தாலும் நாம் எப்படியோ போகிறோம், வருகிறோம். 'பிளஷர்' இருப்பவர்கள் ஜோராகப் போகமுடிகிறது. அவர்கள்கூட தங்கள் வேலை இந்த ரோடு பழுதினால் கெட்டுவிடுகிறது என்கிறார்கள். இந்தக் கொஞ்ச நாட்களில் இவ்வளவு கஷ்டம் என்று நாம் சொல்கிறோம். ஆனால் பிறந்தது முதல் சாகிறவரைக்கும் கஷ்டத்திலேயே முழுக்க முழுக்க வாழ்ந்துகொண்டு இருப்பவனுக்கு உதவ ஆள் இல்லையா இந்த தேசத்தில்? அவன் எவ்வளவு கஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டு எவ்வளவு நாள் இருப்பான்? நாமும் கொஞ்சம் அவன் விஷயத்தில் மனம் இரக்கம் கொள்ளவேண்டாமா? ரோடுகள் போய்விட்டது என்று இவ்வளவு பேர் பேசுகிறோம். விவசாயி அவ்வளவு கஷ்டப் பட்டுக்கொண்டு இருக்கிறானே என்று மனம் இரங்கி அவனுக்கும் கொஞ்சம் உதவி செய்திருந்தால் கடவுள் இவ்வளவு பெரிய மழையை இங்கு கொண்டுவந்து விட்டிருக்கமாட்டார் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. கோயம்புத்தூர் ஜில்லாவை எடுத்துக் கொண்டால் மேற்குப் பகுதியில் நல்ல மழை பெய்திருக்கிறது. பல்லடம் தாலுகா என்று சொல்லும்போது, 'பல்லடம் பஞ்சம்' என்று சொல்வார்கள். பல்லடம் என்றாலே பஞ்சம் என்று சொல்லக்கூடிய நிலைமையில் அது இருந்துகொண்டிருக்கிறது. 5-00 p.m.

THE HON. SRI R. VENKATARAMAN: அடுக்கு மொழியில் சொல்லப்படுகிறது. பரம்பிக்குளம் என்றும் சேர்த்துக்கொள்ளலாம்.

SRI K. V. RAMASWAMY: பரம்பிக்குளம் என்று சேர்த்துக் கொண்டால் பல்லடம் பஞ்சம் என்ற அளவுக்கு அது வரவில்லை. ஏனென்றால் கழிவுத்தண்ணீரில் வரக்கூடிய நிலையில் அந்தத்

[Sri K. V. Ramaswamy] [23rd January 1961

தாலுக்காவுக்குப் பிரயோஜனம் இல்லாமல் இருக்கிறது. குந்தா கழிவு நீர்த் திட்டத்திலே அந்தத் தாலுக்கா எந்தப் பிரயோஜனமும் அடையவில்லை. இவ்வளவு மழை பெய்தும்கூட கிணற்றுத் தண்ணீர் எவ்வளவு நேரம் ஓடுகிறது? அதனால் இறைத்துத்தான் விவசாயம் செய்யவேண்டும். சில சந்தர்ப்பங்களிலே அவை வறண்டும் போய்விடுகின்றன. இரண்டு மணி நேரம் ஓடுகிறது என்றால் அது நல்ல கிணறு என்ற நிலையில் இன்று இருக்கிறது. இந்த நிலை மாறவேண்டும். தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பிற்பட்ட மக்களுக்கும் தகுந்த உதவி செய்து அவர்களை முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்ற அபிப்பிராயம் இருக்கிறதே அதே முறையில் பிற்பட்ட விவசாயிகளுக்கும் உதவி செய்யவேண்டும். என்னுடைய ஜில்லா, தாலுக்காவைப் பற்றி மட்டும் நான் பேசவில்லை. எந்த ஜில்லாவாக இருந்தாலும் சரி, எந்த இடத்தில் விவசாயிகளுக்குக் குறைவான சந்தர்ப்பங்கள் இருக்கிறதோ அங்கெல்லாம் அவர்களை நல்லமுறையில் முன்னுக்குக் கொண்டுவரவேண்டியது அரசாங்கத்தினுடைய கடமையாகும். மற்ற தொழில்களுக்கும் விவசாயத் தொழிலுக்கும் வித்தியாசம் இருக்கிறது. எங்கள் ஜில்லாவிலே அனேகமாக பஞ்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. தொழிலாளிகள் எல்லாம் அங்குதான் போகிறார்கள். அதன் காரணமாக விவசாயம் செய்யக் கூடியவர்களுக்கு கூலி ஆட்கள் கிடைப்பது ரொம்ப கஷ்டமாக இருக்கிறது. அவர்களுக்குக் கூலி அதிகமாகக் கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. மில்லில் அதிகமாகக் கூலி கொடுக்கப்படுகிறது என்றால் அந்தத் தொழிலில் லாபம் கிடைக்கிறது. அதேமாதிரி கூலியை விவசாயி கொடுப்பது சாத்தியம் இல்லை. இருந்தாலும் மில்லில் கொடுக்கும் கூலியை ஒட்டித்தான் விவசாயியும் கூலி கொடுக்கவேண்டியவனாக இருக்கிறான். அதற்கு சமமான ஒரு நிர்ணயத்தை ஏற்படுத்தினால் ஒழிய விவசாயம் முன்னுக்கு வரமுடியாது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அதே மாதிரி பாதையை எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு கிராமத்திற்கும் பாதை வசதி அவ்வளவாக இல்லை. மின்சார வசதியை எடுத்துக்கொண்டாலும் அதேமாதிரி இருக்கிறது. சில கிராமங்களுக்குக் கிடைத்திருக்கிறதே தவிர இன்னும் பல கிராமங்களுக்குப் பாதைகள் கூட போடுவதில்லை. இப்போது சபையிலுள்ள உப தலைவர் அவர்களுக்குத் தெரியும். அவரும் என் ஜில்லாவாசி. எனக்கும் அவருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஜில்லாபோர்டு பிரசிடெண்டாக இருந்த காலத்திலிருந்து தெரியும். நான் என் கிராமத்தில் ஆடி ஓடிக்கொண்டு இருந்த காலத்திலிருந்து அங்கு சரியான பாதை கிடையாது. இப்போது சென்ற ஆண்டிலிருந்து ஏதோ கற்கள் கொண்டுவந்து போடப்பட்டன. அந்தக் கல்லும் எங்கோ போய் மறைந்துவிட்டது. மீண்டும் அதை எடுத்துப் போட்டிருக்கிறார்கள். ஆயினும் செப்பனிடவில்லை. சூளூருக்கும் கண்ணம்பாளையத்திற்கும் இரண்டு மைல் நாலு பர்லாங் தூரம். அந்தப் பாதையை இன்னும் செப்பனிடவில்லை. எனக்கு இது ஒரு விதத்தில் சௌகரியமாக

23rd January 1961] [Sri K. V. Ramaswamy]

இருக்கிறது. யாராவது ரோடுபோடவில்லை என்று கேட்டால் "என்ன செய்வது எங்கள் ஊருக்கே பாதை போட முடிய வில்லையே" என்று சொல்லி தப்பித்துக்கொள்ள ஒரு வாய்ப்பு இருந்துகொண்டு இருக்கிறது. இது மாறவேண்டும்.

பள்ளிகளிலே ஒவ்வொருவருக்கும் 11 வயது வரைக்கும் இலவசக் கல்வி கற்பிக்கப்படுமென்று இருக்கிறது. நண்பர் திரு. முத்துக்கண்ணப்பன் அவர்கள் கூறிய பிரகாரம் இன்னும் அதனை நான்கு ஆண்டுகள் அதிகமாக்கி எஸ்.எஸ்.எல்.சி. வரைக்கு மாவது அவர்களைப் படிக்க வைக்கும் நிலைமையை உண்டுபண்ண வேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். அது மட்டுமல்ல, அவர்களுக்கு இந்தக் கல்வியைப் புகட்டுவதில் மட்டும் பிரயோ ஜனம் இல்லை. சிறிய குழந்தைகளிலிருந்தே அவர்களுக்கு சத்தியம், சாந்தம் இவைகளை நல்லமுறையிலே புகுத்தவேண்டும். அதற்கு நல்ல ஆசிரியர்கள் தேவை. நல்ல சற்குணவந்தவர்களாக ஆசிரியர்களைப் பொறுக்கி எடுக்கவேண்டும். சில சந்தர்ப்பங் களிலே அது கொஞ்சம் அரிதாக இருக்கிறது. அதனால் கிடைத்த ஆசிரியர்களைக்கொண்டு நடத்தவேண்டிய நிலைமை இருக்கிறது. நிர்வாகத்திலே பல கஷ்டங்கள் ஏற்படத்தான் செய்கின்றன. அடுத்தபடியாக பள்ளிக்கூட நிலைமை இருக்கிறது. சில பள்ளிக் கூடங்களிலே நான் சென்று பார்த்தேன். எங்கள் ஊருக்கும் கோயம்புத்தூருக்கும் இடையில் சிங்கநல்லூர் என்ற கிராமம் இருக்கிறது. அங்கு ஒரு சமயம் பிள்ளைகள் பள்ளிக்கூடம் போகா மல் வீட்டில் இருந்தார்கள். ஏன் என்று கேட்டதில் பள்ளிக்கூடம் மழையினால் ஒழுகுகிறது. அதனால் வாத்தியார் பள்ளிக்கூடம் விட்டுவிட்டார் என்று சொன்னார்கள். உடனே பள்ளிக்கூடத்தைப் பார்க்கப் போனேம். பாடசாலை பூராவும் தண்ணீர் தேங்கி நின்றது. போன வருஷம்தான் ரிப்பேர் செய்தார்களாம். ஜில்லா போர்டிலிருந்து 3,500 ரூபாய் விதம் இரண்டு ஷெட்டு களுக்குக் கூரை போட்டிருக்கிறார்கள். அப்படியும் ஒழுகுகிறது. 5-10 p.m. அதற்கு முந்தின வருஷம் இதற்கும் மோசமாக இருந்ததாம் அது. அடுத்தபடியாக பெரிய கட்டிடங்கள் சில இருக்கின்றன. அந்தக் கட்டிடங்களிலுள்ள ஷெட்டுகள் தலையில் விழக்கூடிய நிலையில் இருக்கின்றன. இதுபோன்ற இடங்களை கல்வி அதிகாரிகள் சென்று பார்வையிடவேண்டும். அவ்வப்போது செய்யக்கூடிய வேலைகள் என்ன என்ன என்று அவர்கள் தெரிந்து சொல்லா விட்டால் அவர்களுக்கு சம்பளம் எதற்குக் கொடுக்கப்படுகிறது? அது வீண்தான். ஆரம்பத்திலே சிறிது கவனம் செலுத்தாத காரணத்தால் ஜனங்களுக்கு அதிருப்தி ஏற்படுகிறது. சின்ன ரிப்பேராக இருக்கும்போதே தெரிந்து செய்தால் அதிகமாக தொகை செலவிடவேண்டியதில்லை—என்பதுதான் என் அபிப் பிராயம்.

அடுத்தபடியாக இந்த உர வினியோகத்தைப்பற்றி சொல்ல விரும்புகிறேன். கரும்புக்கு அதிகச் சலுகை கொடுத்து வரு கிறார்கள். பயிர்த்தொழில் செய்வது ரொம்பக் குறைந்து வரு கிறது. தானிய உற்பத்தி அதனால் அதிகம் பாதிக்கப்படுகிறது.

[Sri K. V. Ramaswamy] [23rd January 1961

கரும்புக்கு உரம் கொடுக்கிறார்கள். மற்ற வேளாண்மைக்கு, புகையிலைக்குக் கொடுக்கப்படுவதில்லை. அதற்குக் கொடுக்கவேண்டுமென்று பல தடவை பேசியிருக்கிறேன். புகையிலை பயிர் செய்தால்தான் இரண்டு பயிர்கள் பயிர் செய்யமுடியும். என் அனுபவங்களை வைத்து பல தடவை இதைக் கூறியிருக்கிறேன். அப்படி இருந்தும்கூட புகையிலைக்குச் சரியான உரம் கிடைப்பதில்லை. இது மிகவும் முக்கியமானது என்பதை இந்த சபையிலே தெரிவித்துக்கொள்ளுகிறேன். அடுத்தபடியாக ஜனங்கள் அதிகமாக இருக்கிற காரணத்தால் பஸ் ஏற்பாடுகள் விஸ்தரிக்கப்படுவதை கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **SRI A. GAJAPATHY NAYAGAR**: சட்டமன்ற உப-தலைவர் அவர்களே, நமது மாட்சிமை தங்கிய மஹாராணியார் அவர்கள் நம் நாட்டிற்கு வந்திருக்கிறார். அவர் வந்த வழி "purple way" அரசிக்கு மாத்திரம் ஏற்பட்ட வழி. அவர் நமது கிராமப்புறங்கள் எப்படி இருக்கின்றன என்று பரிசோதனை செய்கிறார். இங்கிலாந்திலே "She reigns but does not rule" என்று சொல்கிறார்கள். "அரசு செலுத்தவில்லை, ஆளும் தன்மை உண்டு" என்று சொல்கிறார்கள். ஆளும் தன்மை வாய்ந்த மஹாராணியார் தாய்மை கொண்டவராய் இருப்பதாலும், மக்கள் பெற்றவராய் இருப்பதாலும், நம் நாட்டிற்கு வந்திருந்து மக்களைப் பார்த்து, அவர்களைக் கொள்ளை கொள்வார் என்று நான் நம்புகிறேன். உலகத்திலே வன்மையும் கொடுஞ்செயலும் அதிகமாகிக்கொண்டிருக்கின்றன. அன்னார் வருகையினால் சமாதானம் நிலவ வேண்டுமென்று நான் வேண்டுகிறேன்.

இப்பொழுது நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது நம் நாட்டின் நிலைமை. ஒருவாறு தளர்ந்திருந்தால்தான், உயர்வுக்கு வழி ஏற்படும். எந்த நாடும் குற்றம் குறை இல்லாமலில்லை. நம் நாட்டில் குற்றங்குறைகள் அதிகமாக இருக்கலாம். இருந்தாலும், முயற்சி செய்வது பெரிய முயற்சியாக இருக்க வேண்டும். நம் நாடு வறுமையே குடிகொண்ட நாடு. இருக்கிற மக்கள் ஏழை மக்கள். நூற்றுக்கு 90 பேர் சிறு சிறு நிலங்களை வைத்துக் கொண்டு பயிர் செய்கிறார்கள். கிராமங்களில் மக்கள் இரண்டு மூன்று ஏக்கர்களை வைத்துக்கொண்டு பயிர் செய்கிறார்கள். தினமும் பாடுபடுகிறார்கள்; ஆனால் சாப்பாட்டிற்குக் கஷ்டப்படுகிறார்கள். முன்பு அரை ரூபாய் கூலி, இப்பொழுது ஒரு ரூபாய் வாங்குகிறார்கள். இருந்தாலும் கஷ்டப்படுகிறார்கள். ஏன்? விலைவாசி அதிகமாகிவிட்டது. ஒருவரையொருவர் பழி சொல்லிக் கொண்டோ, கேலி செய்து கொண்டோ இராமல், எந்தவிதமாகப் பாடுபட்டால் நம் நாட்டை முன்னேற்றம் அடையச் செய்ய முடியும் என்று யோசித்து, அதற்குத் தக்கபடி வேலை செய்ய வேண்டும். நாம் செய்யும் வேலை என்ன, நாம் சரியாக வேலை செய்கிறோமா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒரு கதை படித்திருக்கிறேன். தெய்வலோகத்தில் கடவுள் ஒருவரைக் காண்பித்து, "இவர் என்ன செய்தார்?" என்று கேட்பாராம். "சத்திரம், கோயில் கட்டினார், குளங்கள் வெட்டினார்" என்று

23rd January 1961] [Sri A. Gajapathy Nayagar]

பதில் வருமாம். "செய்த வேலை சரி; செய்ய வேண்டிய வேலை என்ன; எந்த வேலையைச் செய்யவில்லை? என்று கேட்பாராம். "பிச்சைக்காரன் வந்தான்; சாப்பாடு போடவில்லை" என்று பதில் வருமாம். "தள்ளு கதவுக்குப் பின்னல்" என்று உத்திரவு வருமாம். அதேபோல் செய்ய வேண்டிய வேலை என்ன, அதை எந்தவிதமாகச் செய்யவேண்டும் என்பதை உணர வேண்டும். அதை யார் உணர வேண்டும்? சுயராச்சியம் வந்த பிறகு, அரசியலார்தான் இதை உணரவேண்டும், வேண்டிய காரியத்தைச் செய்யவேண்டும் என்று நாம் நினைக்க முடியுமா? திட்டமிடுகிறோம். திட்டம் இல்லாமல் நாம் காரியம் செய்வதில் என்ன பயன்? படித்தவர்கள் வருகிறார்கள். இருந்தும் கையில் பணம் இல்லாமல் என்ன செய்வது? கைப்பொருளை வைத்துக்கொண்டு வேலை செய்தால் நல்லது. "கைப்பொருள் உண்டாயின் யானைப் போர் கண்டற்றால்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. வரி போட்டால், எதிர்ப்பு இருக்கிறது. கடன் கேட்டால் தொல்லை. இவ்வளவையும் சமாளித்துக்கொண்டு நல்ல காரியம் செய்வது நற்பண்புகளைக் காட்டுகிறது. அரசியலை நடத்துவது யார்? நம் அமைச்சர்கள். அவர்கள் பல இடங்களுக்கும் போய் வருகிறார்கள். அவ்வாறு போய் வருவது சுகமான வேலையல்ல. காலையில் 6 மணி முதல் 10 மணி வரை ஆகிறது. அப்படிச் செல்லும்பொழுது ஒவ்வொரு கிராமத்தின் தேவைகள் என்ன என்பதைக் கவனிக்கவேண்டும். செய்யவேண்டிய உதவிகள் காலாகாலத்தில் செய்யப்பட்டனவா என்று பார்க்கவேண்டும். எத்தனை மனுக்கள் போடப்பட்டன என்று பார்க்கவேண்டும். பணத் தொகை கொடுக்கப்பட்டதா? விதைகள் கொடுக்கப்பட்டனவா என்று பார்க்க வேண்டும். ஒரு இலாகா செய்கிற வேலையை இன்னொரு இலாகா கண்காணிக்க வேண்டும். அதிகாரிகள் காலாகாலத்தில் செய்ய வேண்டிய வேலையைச் செய்வதில்லை. இதற்கு யாரைக் குறை கூறுவது? அரசாங்க முறை (சிஸ்டம்) சரியாக இல்லை. அதை நாம் சரி செய்யவேண்டும். சட்டங்களை அதிகமாகப் பயன்படுத்தாமல், அதிகாரிகளுக்கு அதிகாரம் கொடுங்கள். உதாரணமாக, ஒரு கிணறு வெட்ட வேண்டுமென்றால், அல்லது மாடு வாங்க வேண்டுமென்றால், ரெவின்யு இன்ஸ்பெக்டர் வருவார், பிறகு தாசில்தாரிடம் பேப்பர் போகிறது. இவ்வாறே காலம் கடந்து போகிறது. இதற்கும் மூன்று நான்கு மாதங்கள் ஆய்விடுகின்றன. நினைத்துப் பார்த்தால் கஷ்டமாக இருக்கிறது. நாம் எல்லோருடைய ஒத்துழைப்பின் பேரில் காரியங்கள் செய்ய வேண்டுமே தவிர, குஸ்தி போட்டுக்கொண்டிருப்பதில் பயன் இல்லை. "பிளாக் டெவலெப்மெண்ட்" வேலை ஆரம்பிக்கிறோம். இதற்காகப் பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ஆகியவை இருக்கின்றன. அவைகளை நிர்வாகம் செய்ய வேண்டியது பி.டி.ஓ.-க்கள் "பிளாக் டெவலெப்மெண்டு" ஒரு தனி இலாகா. அது முதல் அமைச்சர் கைவசம் இருக்கிறது. அதற்கு நிறைய பணம் வேண்டும். அதிகாரிகளுக்கு "டிரெய்னிங்" கொடுக்க வேண்டும். "பிளாக் டெவலெப்மெண்ட்" ஏரியாக்களில் 5-20 p.m.
பணத்தைப் பூராவும் செலவழிப்பதில்லை. இப்பொழுது

[Sri A. Gajapathy Nayagar] [23rd January 1961

மார்ச்சு மாதத்தில் எவ்வளவு பணம் செலவழிக்கப்பட வேண்டுமென்று கட்டாயமாக உத்தரவு போடப்பட்டிருக்கிறது. வேண்டாதவரைக் கூப்பிட்டுப் பணம் கொடுப்பது, அவர் உபயோகப்படுத்தாமல் பணத்தைத் திருப்பிக் கொடுப்பது என்ற வழக்கம் இருந்து வருகிறது. நாம் ஒவ்வொருவரும் கிராமங்களுக்குப் போய் இம்மாதிரி வழக்கத்தை நீக்க வேண்டும். அப்படிச் செய்யாமல், அதிகாரிகளையும் அரசியலாரையும் குறை கூறுவதில் பயனில்லை. குறை கூறவேண்டியது தான். ஆனால் மிகைப்படுத்திக் கூறக் கூடாது.

அடுத்தபடியாக சுகாதார நிலைமை What is the health of a nation? நம் நாட்டில் ஆஸ்பத்திரி வசதி போதுமானதாக இல்லை, படுக்கை வசதியில்லை, என்று சொல்கிறோம். உடம்பை சுகாதாரமாக வைத்துக்கொண்டால், ஆஸ்பத்திரி எதற்கு? தடுப்பு முறையை அனுசரிக்காமல், மற்றது பேசிப் பிரயோசனமில்லை. "மலேரியா எராடிகேஷன் பிரோகிராம்" நிறைவேற்றிக்கொண்டு வருகிறோம். World Health Organisation வந்திருக்கிறது. அதைப் பயன்படுத்த வேண்டும் "Prevention is better than cure" "பிரிவென்ஷன்"-க்கு ஒருவரும் முன்வருவது கிடையாது. இப்பொழுது இருக்கும் நிலைமைக்கு யார் பொறுப்பு You are responsible for the condition." ஆதலால், ஒவ்வொருவரும் தன் கடமையை உணர்ந்து உதவி செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது மக்கள் பெருக்கம் அதிகமாகிக்கொண்டு வருகிறது. 1950-இல் 3 சதவிகிதம், 1970-இல் 8 சதவிகிதம் உயர்வு இருக்கும். குடும்பக் கட்டுப்பாட்டு முறையை ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டும். குடும்பக் கட்டுப்பாடு, ஆரோக்கிய நிலை இரண்டையும் கவனிக்க வேண்டும். உயிர் நாடியாக இருக்கும் விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டும். கட்சிகள் இருக்கவேண்டியதுதான் கொள்கைகள் இருக்க வேண்டியது தான். எந்த ஊரிலும் இல்லாத கட்சி நம் ஊரில் இருக்கிறது. மதிப்பு, மரியாதை இல்லாமல் திட்டுகிறார்கள். ஆவேசத்தினாலும் அறிவின்மையாலும் எல்லாப் பண்புகளையும் இழந்து, நமது மக்கள் சீர்கெட்ட நிலையில் போய்க்கொண்டிருக்கிறார்கள். நமது மேன்மை, மரியாதையைக் காப்பாற்றிக்கொண்டு நமது மக்கள் உயர்ந்து வாழ வேண்டுமென்பதற்காக நாம் பாடுபடவேண்டும். எனக்குப் பேச சந்தர்ப்பம் அளித்த உதவித் தலைவர் அவர்களுக்கு வந்தனம் செலுத்திக்கொண்டு நான் என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

DEPUTY CHAIRMAN : Is any other hon. Member going to speak?

SRI MOHAMED RAZA KHAN : No, Sir.

DEPUTY CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.